# கம்பன் புகழாரம்



"செந்தமிழ் அருட்செம்மல்"

திரு. பி. எஸ். ஜி. ஜி. கோவிந்தசாமி

துணைத் தலைவர், கம்பன் கழகம்

கோவை



வெளியீடு

கம்பன் கழகம்

கோவை

368

ஸ்ரீ

# கம்பன் புகழாரம்

## நம்மாழ்வார் துதி

1. பொன்பொலிசக் கரத்தவனும்
        பொன்மகளும் கேட்டுவப்ப
இன்னமுதோ? தீந்தேனோ?
        எனும் திருவாய் மொழிப்பாடல்
கன்மலைநெஞ் சினையுருக்கும்
        கவிமழையாய்ப் பொழிந்தானைத்
தென்குருகூர்த் தேசிகனைத்
        தெரிசித்துவினை துணிப்பாம்

[பொன்பொலி=அழகுபொலியும்; பொன்மகள்=மகாலக்குமி; தீந்தேன்=இனியதேன்; தேசிகன்=குரு (நம்மாழ்வார்) தெரிசித்து=வணங்கிச் சேவித்து; வினைதுணிப்பாம்=பாவத்தைப் போக்குவோம்]

## ஸ்ரீவரதராஜப்பெருமாள் துதி

2. சீர்மலி மகுடம் மதிபுரை வதனம்
செறிந்தபஞ் சாயுதம் சேர்ந்த
ஏர்மலி புயங்கள் எழிலியின் வண்ணம்
இன்னருள் பொழிமலர் நயனம்
நார்மலி யுள்ளத் தடியனேன் காண
நல்லருள் புரிந்தனை நன்றே!
கார்மலி பொழில்சூழ் பூளைமா நகர்வாழ்
கருணையே வரதநா யகனே!

[சீர்மலி=சிறப்புடைய; மகுடம்=கிரீடம்; மதி= சந்திரன்; வதனம்=முகம்; பஞ்சாயுதம்= சங்கு, சக்கரம், கதை, வாள், வில் என்னும் ஐந்து ஆயுதங்கள்; ஏர்= அழகு; எழிலி=மேகம்; நயனம்=கண்; நார்=அன்பு; கார்=மேகம்; சூழ்=சூழ்ந்த; பூளைமாநகர்=பூளைமேடு; வரதநாயகன்=வரதராஜப்பெருமாள்.]

## அனுமன் துதி

3. ஆதித்த னிடம்கலைகள் அத்தனையும்
கற்றுணர்ந்தோய்! அறிவின் மிக்கோய்!
பேதித்த உயிரினத்தை வாழ்வித்த பெருந்தகையே!
பெருமா னுக்காய்ச்
சாதித்த சாதனையின் சரித்திரத்தின் தலைவனே!
தகவின் மேலோய்!
பாதித்த வினைதீரப் பாதத்தைப் பணிகின்றோம்
பார்த்தி டாயே!

[ஆதித்தன்=சூரியன்; மிக்கோய்=மேலானவனே; பேதித்த=மாறுபட்ட; பெருந்தகை=பெருந்தன்மை மிக்கவன்; சாதித்த=நிறைவேற்றிய; தகவு=உயர்பண்பு; பாதித்த=உபத்திரவம் தந்த; வினை=தீவினை]

## நாமகள் துதி

4. பூமகளும் மலைமகளும் புவிமகளும் புகழ்பாடப்
புலமை சேர்க்கும்
நாமகளின் பெருமையெலாம் நவிலுதற்கிங்
கியலுவதோ? நல்லோர் போற்றும்
பாமகளைப் பார்மகிழப் பார்த்தருளும்
பாவைதனைப் பாரோர்க் கெல்லாம்
கோமகளை அறிவாக்கும் குலமகளை
உளம்கொண்டு கும்பிட் டுய்வாம்

[பூமகள் = மகாலக்குமி; மலைமகள் = உமாதேவி; புவிமகள் = பூமிதேவி; நாமகள் = சரஸ்வதி; நவிலுதற்கு = சொல்வதற்கு; இயலுவதோ = முடிந்ததோ; பார் = உலகம்; பாவை = தெய்வமகள்; கோமகள் = தலைவி; உளம் கொண்டு = மனதில்வைத்து; உய்வாம் = வாழ்வோம்.]

## கம்பர் துதி

5. சம்பரனை வதைத்துயரும் தசரதரா மன்தனது
சரிதம் தன்னை
இம்பரமு தெனத்தமிழில் எடுத்துரைத்த
கவிவேந்தை இணையில் லோனைக்
கம்பனென நாடுரைக்கும் கவித்துவத்தின்
முழுநிறைவைக் காப்பாய்! என்று
செம்பதுமத் தாளிரண்டும் சென்னியின்மேற்
கொண்டுதினம் சேவித்துய்வாம்

[சம்பரன் = ஒருஅரக்கன்; வதைத்து = கொன்று; சரிதம் = வைபவம்; இம்பர் = இவ்வுலகம்; கவிவேந்து = கவியரசன்; இணை = நிகர்; செம்பதுமம் = செந்தாமரை; தாள் = பாதம்; சென்னி = தலை; சேவித்து = வணங்கி; உய்வாம் = வாழ்வோம்.]

## கம்பன் புகழாரம்

1. புத்துலக சிற்பியெனப்
போற்றிப் புகழ்ந்தறிந்தோர்
எத்திசையும் போற்றிசெயும்
ஈடில்லாப் பெரும்புலவன்!
சித்தசித்தோ டீசனெனச்
செப்புகின்ற மூவகையின்
தத்துவத்தின் முடிவுணர்ந்த
தவக்கவிஞன் கம்பனன்றோ?

[புத்துலகம்=புதிய உலகம்; எத்திசையும்= எல்லா திசைகளிலும்; ஈடில்லா=நிகரில்லாத; சித்தசித்தோடீசன்=சித்து, அசித்து, ஈசன்; தத்துவம்=உண்மைப்பொருள்; உணர்ந்த=அறிந்த]

2. நாட்டு நடப்பறிந்து
நாட்டுமக்கள் உளமறிந்து
பாட்டுத் திறமறிந்து
பாட்டுரைத்த பாவாணன்
வாட்டமிலா வாழ்வுக்கோர்
வழிகாட்டி நாட்டையுய்த்த
பாட்டரசன் கம்பனைப்போல்
பாடியவர் ஈங்குளரோ?

[நாட்டுநடப்பு=உலகியலறிவு; பாட்டுத்திறம்=கவிதை நலம்; பாவாணன்=கவிஞன்; வாட்டமிலா=வாடுதல் இல்லாத; உய்த்த=காத்த; பாட்டரசன்=பாவேந்தன்; ஈங்கு=இங்கே]

3. அறம்தழைக்க வள்ளுவன்செய்
அரியகுறட் கருத்தின்
திறம்விளக்க ராமகதை
தேர்ந்திங் கெடுத்தானோ?
மறம்கெடுத்துத் தருமத்தின்
மாண்புரைத்த கம்பனைப்போல்
சிறந்தவொரு பாவலனைத்
தேசமினிக் கண்டிடுமோ?

[அறம் = தர்மம்; அரியகுறள் = சிறந்ததிருக்குறள்; திறம்= ஆற்றல்; மறம்= அதர்மம்; மாண்பு= பெருமை; பாவலன்= கவிஞன்]

4. சொல்லுக்குச் சொல்லின்பம்
தொடரும் பொருளின்பம்
நல்வித் தகக்கவிதை
நயமுரைக்க நாவுளதோ?
கல்லும் கவிபாடும்
கவியின்பம் நெறிகூறும்
வில்லின் விறலை
விரித்துரைத்தான் வித்தகமென்?

[தொடரும்= தொடர்ந்துவரும்; வித்தகம்= சாமர்த்தியம்; நெறி= வழி; வில்லின்விறல்= வில்லை ஆயுதமாகக் கொண்ட ஸ்ரீராமபிரான் பெருமை; விரித்துரைத்தான் = விரிவாகக்கூறிய கம்பநாட்டாழ்வார்.]

5. காவியப்பூஞ் சோலையோ?
கற்பனையின் ஊற்றோ?
ஓவியத்தும் எழுதவொணு
ஒப்பில்லாப் பேரழகோ?
ஆவிக் கொருபற்றோ?
அறமோ? பெருந்தவமோ?
நாவினிக்கப் பாடிவைத்த
நயமுரைக்கச் சொல்லுளதோ?

[காவியப் பூஞ்சோலை= காவியமாகிய மலர்ப்பொழில்; கற்பனையின் ஊற்று= கற்பனை ஊறுகின்ற ஊற்று; ஓவியம் = சித்திரம்; எழுதவொணு= எழுத இயலாத; ஒப்பில்லா = நிகர் கூற முடியாத]

6. உலகமகா காவியத்துள்
ஒன்ருய்ச் சிறந்ததுவாய்
இலகும் இதிகாசம்!
ஏற்றமிகும் ராமகதை!
பலகற் றதனுல்
பயனறியா தாருமிதில்
சிலகற் றுணரச்
செய்தனனே? கம்பனிங்கே!

[உலக மகாகாவியம்=உலகத்துப் பெருநூல்கள்; இலகும் =விளங்கும்; ஏற்றம்=உயர்வு; பயன்=பிரயோஜனம்.]

7. படிக்கும் தொறும்புதுமை
பயக்குமே கேட்கின்ருேர்
துடிக்கும் மனத்தின்
துயர்போக்கும்; சாந்திதரும்
வடிக்கும் தமிழமுதாய்
வானமுதப் பெட்டகமாய்
நடக்கும் உயிர்க்கவிதை
நலம்கூற வல்லேனே?

[பயக்கும்=விளேவிக்கும்; போக்கும்=மாற்றும்; சாந்தி= அமைதி; வானமுதம்=தேவாமுதம் பெட்டகம்= பொக்கிஷஅறை; உயிர்க் கவிதை=உயிரோட்டமுள்ள பாடல்; நலம்=நன்மை]

8. ஈடும் இணேயுமிலா
இதிகாசம் என்றறிந்தோர்
பாடும் பெருமைப்
பார்புகழும் ராமகதை
வாடும் பயிருக்கு வான்மழைபோல்
கற்ருேர்க்குத்
தேடும் பொருளாம்,
தெவிட்டாத அமுதமன்ருே?

[ஈடு=நிகர்; இணை=சமம்; பார்=உலகம்; மழைபோல்= மழைபோல; தேடும்பொருள்=தேடிப்பெறவேண்டிய செல்வம்]

9. கல்வியிலே பெரியன் கம்பனென்பார் அப்பழஞ்சொல்
நல்வித்த கத்தின்நலம்காட்டும்; என்றாலும்
சொல்லில் அடங்காத சூட்சுமமெல் லாம்கவியில்
சொல்லி விளங்கவைக்கும்
சூழ்ச்சியினை என்னென்பேன்!

[பழஞ்சொல்=பழமொழி; நல்வித்தகம்=சிறந்த ஆற்றல்; சூட்சுமம்= நுட்பம்; சூழ்ச்சி=அறிவாற்றல்]

10. ஆயும் தொறும்அறிவுக்
காக்கம்தரும்; சொல்லும்
வாயும் மணக்கும்
வாழ்வுக் கொளிசேர்க்கும்
நேயம் சிறக்கவைக்கும்;
நீதியறம் தழைக்கவைக்கும்
தாயனையான் கம்பன்
தனித்ததொரு தெய்வங்கொல்!

[ஆயும்தொறும்=ஆராயும்தோறும்; ஆக்கம்=வளர்ச்சி: நேயம்=நட்பு; தாயனையான்=தாய்போன்றவன்; கொல்=வினாப்பொருளில் வந்தது]

**11.** தமிழென்னும் சோலையிலே காப்பியநன் மலர்கள்
தனிச்சிறப்பு வாய்ந்தவையாய்ப் பொலிகின்ற
தறிவீர்!
அமிழ்தென்று கற்றறிந்தோர் போற்றியுவந்தேத்தும்
அற்புதமாம் சொற்கோயில் அமைத்திட்டான்
கம்பன்!
இமிழ்கடல்சூழ் புவியினிலே தமிழன்னைக் கேற்றம்
இதனாலுண் டடில்லாக் காப்பியமீ தன்றோ?
அமிழ்தான தமிழ்ப்பெருமை அகிலமெலாம் பரவ
அணிசெய்தால் 'தமிழரசி' அகம்களித்தல்
வியப்போ?

[பொலிதல்=விளங்குதல்; ஏற்றம்=உயர்வு; உவந்து= மகிழ்ந்து; இமிழ்கடல்=ஒலிக்கும்கடல்; அகிலம்=எல்லா உலகங்களும்; அணிசெய்தல்=அழகுபடுத்துதல்; அகம் களித்தல்=மனம்மகிழ்தல்.]

12. பக்தியினுல் ஒழுக்கத்தால் பண்பாட்டால் உயர்ந்து
பாருக்கே வழிகாட்டித் தமிழ்நாடு சிறக்கச்
சக்திபெரும் வகைதெரிந்து சத்தியநன் னெறியைச்
சாற்றினுன் 'ராமகதை' எனும்பெயரால் கம்பன்
முத்திக்கும் வழிகாட்டும் முத்தமிழ்க்காப் பியமாய்,
முதுமறையின் நெறிகூட்டும் முதற்பெருங் காப்பியமாய்,
பக்திக்கு வரம்பாகும் பழந்தமிழ்க் காப்பியமாய்ப்,
படிப்பவர்க்குப் பயன்விளைக்கும் பைந்தமிழ்க் காப்பியமே

[சக்தி=வலிமை; சத்தியநெறி=மெய்நெறி; முதுமறை= பழமறை; வரம்பு=எல்லை; விளைக்கும்=விளைவிக்கும்; பைந்தமிழ்=பசுந்தமிழ்.]

13. அறத்தினையே அடிப்படையாய்க் கொண்டி யங்கும்
அரசியலைக் காட்டுகிறுன் கம்பன் காணீர்!
மறத்திறத்தால் அல்லாது மன்னன் அன்பு
மனத்திறத்தால் 'மக்களுயிர்க்குடம்பு' போன்ற
திறத்தினனுய் வாழ்கின்றுன்; இடித் துரைத்துத்
தீங்ககற்றும் நல்லுரிமை மக்கட் குண்டு!
'பொறுத்தவரே புவியாள்வார்' என்னும் நீதி
பொதுவன்றே? செவிகைப்பப் பொறுப்பான் மன்னன்

[காணீர்=காணுங்கள்; மறத்திறம்=வீரத்தின்வலிமை; இடித்துரைத்து=இடித்துச்சொல்லி; செவிகைப்ப= காதுக்குக்கசக்க]

''உயிரெலாம் உறையுமோர் உடம்புமாயினுன்'' என்ற கம்பன் பாடல் கருதத் தக்கது.

14. 'கல்வியிலார் கோசலத்தில் எவரும் இல்லை
காண்மி' னென்று கட்டுரைக்கும் கம்பன் வாக்கு,
நல்லதொரு சமுதாயம் நிலவக் கல்வி
நாட்டினுக்கிங் கவசியமாம் என்னும் உண்மை
சொல்லுமன்றோ? கல்வியொடு செல்வம் பூத்துச்
சொகுசாக வாழ்கின்ற மகளிர் தம்மை
இல்லறத்தின் பெருமையினை, வருந்தி வந்தோர்க்
கீத்துவக்கும் இன்பத்தை, எடுத்துக் கூறும்

[கோசலம்=கோசலநாடு; காண்மின் = பாருங்கள்; வாக்கு=சொல்; பூத்து=மலர்ந்து; சொகுசாக=செழுமையாக: ஈத்துவக்கும்=கொடுத்து மகிழும்]

15. யாரோடும் பகைகொள்ளா தண்டை நாட்டை
அரவணைத்துப் போகின்ற அரசின் நுட்பச்
சீரெல்லாம் கம்பனைப்போல் தேர்ந்தா ருண்டோ?
செப்பும்நெறி நின்றாலே திருந்தும் வாழ்வு!
ஆரிதனைக் கேட்கின்றார்? அரிய நீதி
அத்தனையும் நன்னெறியில் நிறுத்திக் காக்கும்
பேரோடும் புகழோடும் நாடு வாழப்
பேசுகின்ற நெறியனைத்தும் வாய்மை யன்றோ?

[அண்டைநாடு=பக்கத்துநாடு; அரவணைத்து=தழுவி; சீர்=சிறப்பு; செப்பும்நெறி=கூறும்வழி; அரியநீதி= அருமையான நீதிகள்.]

16. அறம்வளர்க்க வந்தநம்பி சரிதம் தன்னை
அமுதொழுகும் தமிழினிலே பாடித் தந்த
திறம்தன்னைப் பேசுதற்குச் சொற்கள் உண்டோ?
தெய்வீகப் பாவலனைச் செப்பு மாறென்?
மறம்சேர்ந்த நெஞ்சினர் உண்மை காணார்;
மாண்பறியார், கம்பனுக்கும் குறையுரைப்பார்
அறம்தழைக்க மறம்தேய அவனிக் கெல்லாம்
அச்சாணி எனத்திகழும் கவிதை அன்றோ?

[நம்பி=ஆண்களுள் சிறந்தவன்; சரிதம்=வைபவம்: திறம்=வல்லமை; செப்புமாறு = செப்பும்விதம்; மாண்பு=பெருமை அவனி=உலகம்.]

17. வீட்டினிலே புழங்குகின்ற பாத்தி ரங்கள்
விதம்விதமாய்ப் பலவுண்டிங்கவைகளெல்லாம்
ஓட்டையின்றி உடைதலின்றிப் பயன் படுத்தற்
குரியனவாய் இருந்தால்தான் நன்மை யுண்டு
பாட்டுயர்ந்த காவியப்பாத்திரங் களுக்கும்
பயன்வேண்டும்; அதனால்தான் முழுமைஎய்தும்
ஈட்டியமெய்த் தவமேயோ? கம்பன் காட்டும்
எந்தவொரு பாத்திரமும் நிறைவே காட்டும்

[புழங்குதல்=பயன்படுத்தல்; காவியப்பாத்திரங்கள்= காவியஉறுப்பினர்; பாட்டுயர்ந்த=பாடல்களின் அமைப் பில்சிறந்த; முழுமை=நிறைவு; ஈட்டிய=சேர்த்த; மெய்த் தவம்=உண்மையானதவம்.]

18. சக்கரையி னால்செய்த பொம்மை தன்னைத்
தனித்தனியே எவ்வுறுப்பைச் சுவைத்
திட்டாலும்
சக்கரைதான்; இனித்திருக்கும் தன்மை போலத்
தவக்கம்பன் படைப்பெல்லாம் தகவே
காட்டும்
சக்கரவர்த்தி தயரதனார்; தேவி மார்கள்,
தகுதியுறும் பரதநம்பி, சத்து ருக்கன்,
மிக்கவராய் விளங்குதல்போல் கூனி யோடு
மேட்டிமைகொள் தாடகையும் 'மெய்மை
யன்றோ?

[எவ்வுறுப்பை=கை, கால்போன்ற எந்த உறுப்பினையும்; தகவு=மேன்மை; மேட்டிமை=கௌரவம்; மெய்மை= உண்மை.]

19. குறையுள்ள பாத்திரமென் றெதனைச் சொல்ல?
கும்பகர்ணன் தூக்கத்தின் முழுமை யன்றோ?
பொறையினுக் கோர் தவச்சீதை, வீரத் துக்கும்,
புகழுக்கும் கருணைக்கும் ராமன், தாய்மை
நிறைவினுக்கோர் கோசலை, நன் நட்பினுக்கு
நெறியுடைய குகன், தொண்டுக் கனுமன்,
ஆமாம்
கறையகன்ற மனத்துக்கோர் பரதன் கம்பன்,
காட்டுகின்ற பாத்திரங்கட்கிணையும் உண்டோ?

[எதனை = எதை; பொறை = பொறுமை; தாய்மை நிறைவு= தாய்த் தன்மையின் முழுமை; கறை= குற்றம்; அகன்ற= நீங்கிய.]

20. வாய்மைதனைக் காப்பதற்குத் தன்னை யீந்த
வளர்புகழோன் தயரதனை, வள்ளல் தன்னைத்
தூய்மைநிறை மனத்தோடு தொடர்ந்து சென்ற
தொல்புகழோன் இலக்குவனை, நெறியைக்
காத்துத்
தாய்மைக்கோர் இலக்கணமாய்த் தனித்து நிற்கும்
தகுதியுயர் கோசலையை, இரக்க மில்லாப்
பேய்மனத்துக் க்ரக்கர்களைப் பிரித்துக் காட்டும்
பெற்றியினை விரித்துரைக்க எவராலாகும்?

[வாய்மை= சத்தியம்; ஈந்து= கொடுத்த; வள்ளல்= ராமன்; தூய்மை= பரிசுத்தம்; தொல்புகழ்= பழமையான புகழ்; நெறி= மரபு; பேய்மனம்= பேய்போன்றமனநிலை; பெற்றி= பெருமை] ''தன்மெய்ம்மை நிற்பதாக்கி இறந்தான்'' என்ற கம்பன் பாடல் கருதத் தக்கது.

21. ''நாசமே வந்தாலும் நடுங்க மாட்டேன்
நல்லதொரு பகைவனை நான் பெற்றேன்''
என்று
பேசுகின்ற ராவணனைப் போன்றோர் இங்கு
பிறரெவருண் டெதிரிக் கோர் எடுத்துக்
காட்டு?
மாசில்புகழ் ராமன்பேர் நிற்கு மட்டும்
மற்றிவன்பேர் நிற்குமெனும் மாற்றம்
பொய்யோ?
காசினியில் காலத்தை வென்று நிற்கும்
காவியமன் றோ?கம்பன் கவிதைக் கோயில்?

[நாசம்= அழிவு; எதிரி= பகைவன்; எடுத்துக்காட்டு= உதாரணம்; மாசில்புகழ்= குற்றமற்றபுகழ்; மாற்றம்= உரை; காசினி= உலகம்.]

''நாசம் வந்துற்றபோதும் நல்லதோர் பகையைப் பெற்றேன்'' என்பது கம்பன் பாடல்.

22. நீதிக்கோர் உறைவிடமாய்ப்,
பண்பாட்டின் நிலைக்களமாய், நிகரில்லாத
பாதையிலே அழைத்தேகும்
பண்புடைய தோழனுமாய்ப், பாருக்கெல்லாம்
ஆதிபக வன்நெறியை அறிவிக்கும்
முரசமாய், அமைந்து நின்ற
வேதத்தின் மறுபதிப்பாய் விளங்குகிறான்!
கம்பனவன் வெல்க! மாதோ!

[உறைவிடம்= வாழும் இடம்; நிலைக் களம்= நிலையாக நிற்குமிடம்; ஆதிபகவன்= அனைத்துயிர்க்கும் முதல்வனான இறைவன்;]

23. அறநூலென் பார்சிலபேர்; பொருள்நூலென் பார்
சிலபேர்; அரிய இன்பத்
திறம் கூறும் நூலென்பார்;
சிலர் வீட்டு நூலென்பார்; தெய்வக் கம்பன்
முறைதெரிந்து விரித்துரைத்த முத்தமிழ்க்காப்
பியநயத்தை மொழிவதற்கும்,
திறமறிந்து, நெறிதெரிந்து, செப்புதற்கும்
எவருள்ளார்? தெரியின் அம்மா!

[அறநூல்= அறம்கூறும்நூல்; இன்பத்திறம்= காமத்தின் மேன்மை; தெய்வக் கம்பன்= தெய்வீகப்பாவலனான கம்பன்; தெரியின்= ஆராயின்.]

24. நாட்டுநலம் காட்டுகின்ற நாநலத்தைக்
கூறிடவோ? நகர்ச்சி றப்பைப்
பாட்டெடுத்து மொழிவதனைப்
பாராட்டிப் பேசிடவோ?பாவல் லோர்க்குக்
கூட்டமுதம் எனவிருத்தம் சந்தநலம்
கொப்பளிக்கக் கூறும் மேன்மை
ஏட்டிலெழு திடப்போமோ? இன்னமுதும்
இவன்கவிதைக்கிணையா காதே!

[நாநலம்= நாவன்மை; பாவல்லோர்= பாட்டெழுதவல்ல கவிஞர்கள்; கூட்டமுதம்= அமுதக்கலவை; கொப்பளிக்க = துளும்ப; சந்தம்= ஓசை.]

25. ''அருமறைகள் உணர்வரிய அற்புதனை
அஞ்சனத்தின் அழகு காட்டும்
கருமுகிலைப் பயந்தனள்கோ சலை'' யென்று
கட்டுரைத்த கம்பன் பாடல்
திருவவதா ரச்சிறப்பைச் செப்புமுறை
செவிக்குத்தேன் சீர்மைத் தன்றோ?
இருமைக்கும் வழிகாட்டும் எந்தையவன்
பதத்துணையே ஏத்தி வாழ்வோம்.

[அருமறை = அறியவேதங்கள்; உணர்வரிய = உணர்வதற்கு அரிய; அஞ்சனம் = மை; கருமுகில் = கார்மேகம் போன்ற ராமன்; பயந்தனள் = தந்தாள்; சீர்மை = மேலாம் தன்மை; இருமை = இம்மை மறுமை ஆகிய இருமை; எந்தை = எமது தந்தை; பதத்துணை = இரண்டு பாதங்கள்.]

26. ஓதநெடுங் கடலாடை உலகினில்வாழ்
மனிதர்விலங் கெனவே உன்னும்
கோதில்குணத் தருந்தவனும் கலைக்கோட்டு
மாமுனிவன் குணங்கள் தம்மைத்,
தீதகன்ற நல்வேள்வி நடத்திவைத்த
திறம்தன்னைச், செப்பி நாளும்
ஓதிமகிழ்ந் திடவைத்த கம்பனது கவிச்சிறப்பை
உரைக்க லாமோ?

[ஓதம் = ஈரம்; நெடுங்கடல் = நீண்டகடல்; விலங்கு = மிருகம்; கோதில் = குற்றமற்ற; தீதகன்ற = தீமையற்ற ஓதி = பலமுறை கூறி.]

27. தோள்கண்டார் தாடகையைக் கொன்றெழித்த
தூயோன்றன் தோற்றம் கண்டார்!
தாள்கண்டார் சரணடைந்தோர் தமைக்காக்கும்
தத்துவத்தின் தன்மை கண்டார்!
வாள்கொண்ட கண்ணார்தம் மனநிலையின்
உயர்வுதனை வகுத்துக் கூறும்
கேள்வியினால் மிகுகம்பன் கீர்த்தியினைச்
சிலசொல்லால் கிளத்தல் ஆமோ?

'தோள் கண்டார்' எனத் தொடங்கும் கம்பன் பாடலுக்கு விளக்கம் இது. [தூயோன் = ராமன்; தோற்றம் = பொலிவு; சரணடைந்தோர் = அடைக்கலம் அடைந்தோர்; தத்துவம் = உண்மை நிலை; வாள்கொண்ட = வாள்போன்ற.]

28. வருணனைக்கோர் வரைக்காட்சி வளத்துக்கோர்
புனலாடல் வகுத்துக் காட்டி,
உரைநலத்தால் உண்டாட்டும் உலாவியலும்
கடிமணமும் உரைத்துச் செல்லும்
தரமுணர்ந்தோர் அதிசயித்துப் பாராட்டிப்
பலமுறையும்தலையை யாட்டி,
மரபறிந்து பாடிவைத்த கம்பனைத்தாம்
புகழ்வதன்றிமற்றென் செய்வார்?

[வரைக்காட்சி=மலை வளம்காணல்; புனலாடல்=நீர்விளையாட்டு; உண்டாட்டு=உண்டுகளித்தல்; உலாவியல்=திருவுலாச் சிறப்பு.]

29. பாலகாண் டத்தினுக்கோர் கோசிகனை
அயோத்திக்குப் பரதன் தன்னைக்
காலமோர்ந் தங்கெய்தும் கானகத்துக்
கோரரக்கக் கயத்தி தன்னை
வாலியெனும் வானரக்கோன் தன்னைப்பின்
அனுமானை வரிசையாக
மூலகா ரணமாக்கிக் கதைநடத்தும் கம்பனன்றி
மொழிவார் யாரே?

[கோசிகன்=விஸ்வாமித்திரர்; காலமோர்ந்து=நேரத்தை அறிந்து; கானகம்=காடு; கயத்தி=கீழ் மகளானசூர்ப்பனகை; வானரக்கோன்=குரங்கரசன்; மூலகாரணம்=முதற்காரணம்]

30. முரசொலிக்கும் அயோத்தியர்கோன் முடிபடிமேல்
உறஅடிமேல் முறையில் தாழ்ந்தான்
கரைசெல்லாச் சினத்தோனும் கனல்கால்வான்
வருகின்றான் காகுத்தன் மேல்
விரைசெய்துள வத்தாரோன் வீரனெதிர்
புன்முறுவல் விளைத்து நின்றான்
பரசுரா மன்செயலைப் பாட்டெடுத்த
கம்பன்சொற் பான்மை என்னே!

[முடிபடிமேல்உற= தலைதரையிலேபட; தாழ்ந்தான்= வணங்கினான்; கரைசெலா= கட்டுக்கடங்காத; கனல்= நெருப்பு; கால்வான்= உமிழ்ந்தான்.]

31. காடுசெல்வான் ராமன்எனும் கட்டுரைதன்
 செவிப்படலும் கனன் றெழுந்த
 பீடுடைய இளங்கோவின் பெற்றியினை
 எவரிங்கு பேச வல்லார்?
 ஏடெழுதார் சேர்மார்பன் இன்சொலெனும்
 மழைபொழிந்தோர் எழிலி யென்னத்
 தேடிவந்தின் னுரைநவின்று சினம்தணித்த திறம்
 தன்னைச் செப்ப லாமோ?

[கட்டுரை=பேச்சு; கனன்றெழுந்த=கோபித்தெழுந்த; பீடு= பெருமை; ஏடுஎழுதார்=இதழ்விரிந்த மலர்மாலை; எழிலி=மேகம்; நவின்று=கூறி]

32. தாழ்வின்றி எப்பொருளும் அதனியல்பில்
 சிறந்தோங்கும் தன்மை காட்டிப்
 பாழ்வினையின் வலிமையினைப் பக்குவமாய்
 எடுத்துரைக்கும் பான்மை ஒன்றோ?
 ஊழ்வலியை 'இழைக்கின்ற விதி'யென்னும்
 உரைநலத்தால் உணர வைத்தும்
 வாழ்வினுக்காம் துறையனைத்தும் வகுத்துரைத்த
 கம்பனைப்போல் வல்லார் யா ரே!

[தாழ்வின்றி=குறைவில்லாமல்; பான்மை=விதம்; ஊழ் =விதி; உரைநலம்=சொல்லழகு; உணரவைத்து= அறியச்செய்து] ''இழைக்கின்ற விதி முன் செல்ல'' என்ற கம்பன்பாடலடி கருதத் தக்கது.

33. எத்தனையோ கவிஞர்களிங் கிருந்தார்கள்
இருக்கின்றார் இருந்தும் என்ன?
வித்தகக்கம் பனைப்போல விண்ணவரும்
கேட்டுவப்ப விருத்தப் பாவால்
சத்தியநன் னெறிகாட்டிச், சரித்திரத்தைப்
புதுப்பித்துச், சாரம் தேக்கி,
முத்தமிழின் சுவைகூட்டி, மொழித்திறத்தை
நிலைநாட்டி மொழிந்தார் உண்டோ?

[விண்ணவர்= தேவர்; உவப்ப= மகிழ; சத்தியநெறி= மெய்நெறி; சாரம்தேக்கி= சத்தானவிஷயங்களைத்தேக்கி; கூட்டி= சேர்த்து]

34. ''காவிரிநா டன்னதொரு கழனிநா''
டெனக்கம்பன் கட்டுரைத்த
பாவினிமை நாட்டன்பைப் பகர்கின்ற
திறம்காட்டும். பாடல் ஒன்றில்
நாவினிக்க 'என்றுமுள தமிழென்ற''
சொன்னலத்தை நவிலுதற்கு
யாவருளர்? வண்டுதமிழ்ப் பாட்டிசைக்கும்'
என்றகவி வாணன் அன்றோ?

[அன்ன= போன்ற; கழனி= வயல்; என்றுமுளதமிழ்= என்றும் உள்ள தமிழ்; சொன்னலம்= சொல்லழகு; யாவருளர்= யாரிருக்கிறார்கள்?]

35. பெண்மையறம் பிழையாமல் புலமையறத்
தால்காத்த பெற்றி தன்னை,
உண்மையறம் பிறழாமல் உலகியலை
எடுத்துரைக்கும் உயர்வு தன்னை,
வண்மைநலம் குறையாமல் வாய்மையறம்
வளர்த்தபெரு வாழ்வு தன்னை,
ஒண்மையுறும் 'ராமகதை' எனத்தந்த
கம்பனன்றி உரைப்பார் யாரே?

[பிழையாமல் = பிழைபடாமல்; பெற்றி = தன்மை; வண்மை= கொடை; வாய்மை= உண்மை; ஒண்மை= விளக்கம்; உரைப்பார்= கூறுவார்]

36. தமிழென்னும் பாற்கடலை நாவென்னும்
மந்தரத்தால் தான் கடைந்திங்
கமிழ்தென்னும் ராமகதை அருளியகம்
பனைப்போன்றார் யாவ ருள்ளார்?
இமிழ்கடல்சூழ் புவிபோற்றும் இருந்தமிழ்நூற்
புலவனவன் இணையில் லாதான்
தமிழுக்குக் கதியிவனே எனவுரைத்தார்
மெய்ம்மையுணர் தக்கோர் அன்றோ?

[மந்தரம் = மந்தரமலை; யாவருள்ளார் = யாரிருக்கிறார்கள்? இருந்தமிழ்= பெரியதமிழ்; 'கதி' கம்பனும் திருவள்ளுவனும் தமிழுக்குக் கதியாவார் என்பர்]

37. செவியமுத மாம்ராம கதையதனைச்
செந்தமிழ்த்தேன் சேர்த்துக் கூட்டிப்
புவிமகிழத் தந்தவனைப் போற்றுமா
றெவனென்பர் புலவோ ரெல்லாம்!
அவியுணவீ தெனவிரும்பி அனுபவித்து
மகிழ்ந்திடுவர் அறிஞர் எல்லாம்!
குவிமனத்தார் குறைகாண்பார் சிலருண்டிங்
கென்பதனால் குறைவ துண்டோ?

[செவியமுதம்= காதுக்கு அமுதாக இனிப்பது; தமிழ்த் தேன்= தமிழாகிய தேன்; புவி= உலகம்; போற்றுமாறு= போற்றும் வகை; அவியுணவு = அவிர்ப்பாகம்; குவிமனத்தார்= விரியாத குவிந்த மனத்தர்]

38. 'கம்பரசம்' தந்தவரை நாடறியும்;
நாமறிவோம்; கருத்தி லாத
வம்புரையென் பதும்புரியும்; மாங்கனியைக்
குயில்விரும்பும்; வகையில் காகம்
நிம்பதனைத் தின்றுவக்கும்; நெறியில்லா
நெறிசெல்லும் நீதி யில்லார்
கம்பனுக்கும் குறைசொல்வர்; கதிரவனை
நாய்குரைத்த கதையும் உண்டே?

[''கம்பரசம்'' காலம் சென்ற அறிஞர் அண்ணு எழுதிய ஒரு நூல். வம்புரை = வம்புக்குக் கூறும் மொழி; வகையில்= வகையில்லாத; நிம்பு= வேம்பு]

39. இராவணனைத் தமிழனெனக் கதைகட்டிப்
பொய்க்கவிதை இயற்றி யீங்கு
'இராவணகா வியம்' தந்த குழந்தையுரை
பார்த்திருப்பீர்! என்னே! பாவம்!
விராவியவஞ் சகத்தினையும் வெறுப்பினையும்
விலைகூறி விற்கப் பார்த்தார்!
'இராமசா மிப்பெரியார்' சீடரவர்
வழிநிற்றல் இயல்பு தானே!

[இராவண காவியம் பாடியவர் புலவர் குழந்தை. விராவிய = கலந்த; வழிநிற்றல் = வழியில் நிற்பது; இயல்புதானே= இயல்பே அல்லவா? ]

40. இரணியனை ராவணனைத் தமிழர் என்பார்
இலக்கியத்தில் வரலாற்றில் இடமுண்டென்பார்
முரணியபல் புதுக்கதைகள் புனைந்துகூறி
முத்தமிழ்தேர் அறிஞர்கள்தாம் இவர்கள்
என்பார்
அரணியத்தில் பாம்புகள்போல் அந்தோ! நாட்டின்
அழிவுக்கு வழிகாட்டும் நாத்தீகப் பொய்க்
கரவுரைகள் பலசொல்வார்; அவர்கட் கெல்லாம்
கம்பனொரு சிம்மசொப் பனமே யன்றோ?

[முரணிய=முரண்பட்ட; புனைந்து=உண்டாக்கி; அரணியம்=காடு; கரவுரை=வஞ்சக உரை; சிம்ம சொப்பனம்=சிங்கத்தைக் கனவில் கண்ட யானை அஞ்சி நடுங்கும்]

41. வடக்குதெற்குச் சண்டைகளை வளர்க்கலாமா?
வளர்ச்சிக்குத் தடையன்றோ? வகுப்பு வாதம்?
முடக்குவா தப்பொய்மை மூலைக் கேக
முத்தமிழ்க்காப் பியமுரசு முழக்கி நிற்போம்!
அடக்கமுடன் கம்பன்சொல் நெறியில் நின்றே
அறம்வளர்ப்போம்; மறம்தொலையும்; ஆகாப் பொய்மை
இடக்கன்றோ? ஆரியதிரா விடப் பேச்சுக்கள்!
ஏன்வேண்டும்? என்னபயன்? இவைகளாலே!

[வகுப்புவாதம்=ஜாதிபேதவாதங்கள்; முடக்குவாதம் போன்ற பொய்; முத்தமிழ்க்காப்பியம்=கம்ப ராமாயணம்; மறம்=அதர்மம்; இடக்கு=தொல்லை; ஆகாப் பொய்மை=ஆகாதபொய்மை]

42. சரணமடைந் தோர்தமக்குப் பேரின்பம் நல்கும்
தனிமுதலின் உயர்நலத்தை முதற் பாட்டில் கூறி
'அரண்நமக்கிங் கவன்கழலே' என்றுரைத்த கம்பன்
அடிப்படையைப் பொறுத்தமாய் அமைத்து விட்டான் அன்றோ?
பரவுபுகழ் காப்பியத்தின் பெருநோக்கம் அதுவே
பலபடியாய் அக்கருத்தைப் பரக்கஉரைக் கின்றான்!
முரண்நிறைந்த புவிவாழ்வின் முழுநிலையும் உணர்ந்து
முறைநிறுத்தி நெறிகாட்டும் மூதறிஞன் அன்றோ?

[சரண்=அடைக்கலம்; முதற்பாட்டு=உலகம் யாவையும் எனத் தொடங்கும்; அரண்=பாதுகாப்பு; கழல்= பாதங்கள்; பரவுபுகழ்=பரவியபுகழ்; முரண்= வேறுபாடு; முழுநிலை=முழுமையானநிலை; நெறி=வழி]

43. ''அரனதிகன் உலகளந்த அரியதிகன் எனக்கூறும்
அறிவி லோர்கள்
பரகதிசென் றடைவரிய பரிசேபோல்'' எனும்கம்பன்
பண்பு தேரீர்!
பரன்ஒருவன் மதச்சண்டை பயனில்லை எனும்நல்ல
பாதை காட்டித்
தரமுயர்ந்த கவித்துவத்தால் தத்துவத்தை
நிலைநாட்டும்
தன்மை என்னே!

(அரன்=சிவபெருமான்; அரி=திருமால்; அறிவிலார்= அறிவில்லாதவர்கள்; பரகதி=மேலான மோட்சகதி; பரிசு=தன்மை; பரன்=இறைவன்; தரமுயர்ந்த=நிலையில் உயர்ந்துவிளங்கும்)

44. பாவிகத்தைப் பக்குவமாய்ப் படம்பிடித்துக்
காட்டுகின்ற படைப்பின் ஆற்றல்
காவியத்தின் பரப்பினுல் காணெணு தெனக்கருதிக்
கம்பன் சொன்ன
நாவினிக்கும் கதையன்றோ? நரமடங்கல் அவதார
நலன்கள் எல்லாம்
பாவிரிக்கும் திறம்பாடப். பாட்டுளதோ?
அவன்புகழைப் பாடிவாழ் வோம்

('பாவிகம் என்பது காவியப் பண்பே' என்ற நூற்பா கருதத்தக்கது. காணெணுது = காணவியலாது; நரமடங்கல்=நரசிங்கம்; பாவிரிக்கும்=பாடல்களால் விரித்துக் கூறும்; திறம்=வல்லமை.)

45. ஓசைநலத் தாலேயே உரைக்கவரும்
பொருள்தன்னே உணர்ச்சி தன்னைப்
பேசிவிடும் பெருமைதனைப்
பேசுதற்கிங் கெவராலாம்? பேச்சே யின்றிக்
காசில்கொற்றக் காகுத்தன் கதையதனில்
சத்துருக்கன் கனத்து நின்று
பாசமறுத் துயர்ந்திருக்கும் பாங்கதனை
எவர்தாமே பாராட் டாதார்?

(ஓசைநலம்=சந்தஇன்பம்; காசில் கொற்றம்=குற்ற மற்ற வெற்றி; காகுத்தன்=ககுத்தன் மரபில் தோன்றி யவன் ராமன்; கனத்து=கனம்கொண்டு)

46. பாடுபுகழ் குகன்வந்த பரிசும், பின் வள்ளலுடன்
பழகும் பாங்கும்,
நாடறிந்த தொன்றன்றோ? நயப்புகழோன்
கம்பன்தன்நா நலத்தால்
ஈடுமிணை யும்மிலாப் பாத்திரமாய்க்
குகன்விளங்கும் இயல்பு கண்டோம்
தேடுகவிச் சிறப்பினுக்கிங் கொப்பெதனைக்
கூறுவது? திகைப்ப தல்லால்!

(பாடுபுகழ்=பாடுகின்றபுகழ்; பரிசு=தன்மை; வள்ளல்= ராமன் பாங்கு=முறை; தேடுகவிச்சிறப்பு=தேடும் கவித் துவச்சீர்மை)

47. பார்ப்பவர்தம் உளம்கவரும் படியழகு மகளாகப்
பாவை நின்றாள்.
ஆர்க்கின்ற நூபுரத்தின் ஒலிநலத்தால் புனிதனறிந்
ததிச யித்தான்!
சூர்ப்பனகை வரவிதனைச் சொல்வதற்குப்
''*பஞ்சியொளிர்'' சொல் நலத்தால்
ஆர்ப்பரிப்பொன் றில்லாமல் அவள்வருகை
அறிவிக்கும் அமைதி என்னே!

(உளம் கவரும்படி= உள்ளத்தைக் கவருமாறு; நூபுரம் = சிலம்பு; ஆர்க்கின்ற= ஒலிக்கின்ற; புனிதன்= ஸ்ரீராமன்; '"பஞ்சியொளிர்' எனத் தொடங்கும் பாடல். ஆர்ப் பரிப்பு= ஆரவாரம்)

48. இலங்கையர்கோன் இருந்தநிலை எடுத்துரைத்த
கம்பனைப்போல் எவர் உரைத்தார்?
விலங்குமனம் புரிகின்ற விளையாட்டுச்
சேட்டைகளை விரித்துக் கூறி
'அலங்கலிடை அரவென்னும்' உவமைநலத்
தாலறிவித்தறம் உரைப்பான்!
கலங்குமனம் அமைதிபெற, வாழ்வுயர,
வழிகாட்டிக் காப்பான் அன்றே!

(இலங்கையர்கோன்= இராவணன்; விலங்குமனம்= மிருக சுபாவம்; சேட்டைகள்= குறும்புகள்; ''அலங்கலில் தோன்றும்'' என்ற பாடல்)

49. ஆணவத்தின் மொத்தவுரு வாயெதிரில் நிற்கின்ற
அரக்கன் தன்னைக்
காணுகின்ற தவச்செல்வி 'நெறிநில்லாக்
கயவனிவன் கருத்தி லாதான்
ஆணல்லன்! மிருகமென' க் கனன்றுரைத்த
சொற்களெலாம் அறத்தின் தேவி
பூணுகின்ற அணிகலனும்; மறைமொழியாம்
கம்பனுரைப் புதுமை என்னே!

(ஆணவம்= அகம்பாவம்; மொத்தவுரு= முழுவடிவம்; தவச்செல்வி= சீதை; கயவன்= கீழ்மகன்; கனன்று = கோபம்கொண்டு; மறை= வேதம்)

50. தவ முனிவன் வான்மீகி
தந்தகதை யதனைத்தன் தனித்த வாய்மைக்
கவி நலத்தால் மெருகேற்றிப்
பொலிவூட்டிப் புதுப்பித்துக் காட்டு கின்ற
நவகவிதைத் திறமென்னே! நானிலத்தில்
ஒருபுதுமை நாட்டிவிட்டான்!
புவிபுகழும் கவிவேந்தன் கம்பனது தமிழ் என்றும்
புதிதே அன்றோ?

(தவமுனிவன்= தவத்தில் சிறந்த முனிவர்; மெரு கேற்றி= மெருகுகொடுத்து; புதுப்பித்து= புதுமையாக்கி; நவகவிதை= புதியகவிதை)

51 எத்திக்கும் புகழ்கம்பன் எழில்தவழும்
காப்பியத்தின் ஏற்றமெல்லாம்
இத்திக்கும் தமிழினிலே நாளெல்லாம்
செப்பிடலாம் தீர்வ துண்டோ?
பத்திக்கும் வரம்பாகிப் பண்புக்கும்
வழிகாட்டிப் பாரோர்க் கெல்லாம்
முத்திக்கும் படியமைத்த முதுபுலவன்
புகழெம்மால் மொழிவ தாமோ?

(எத்திக்கும்= எல்லாத்திசைக்கும்; எழில்= அழகு; தவழும்= தவழ்கின்ற; தீர்வதுண்டோ= முடியுமோ; பாரோர்= உலகோர்; முது= பழமை)

52 ஆழ்வார்கள் தந்ததமிழ் அமுதுண்டவ்
வனுபவத்தை அரிதில் பெய்து
வாழ்வார்கள்பயன்பெறவோர் பாரகா
வியமாக வடித்திட்டானோ?
தாழ்வான நிலைமாற்றித் தன்னலத்தைப்
புறங்கண்டு தமிழ் நன்னாட்டை
ஏழ்நிலைமேல் ஏற்றிவைத்தான்! எம் கம்பன்!
இதற்கினிமேல் என்ன வேண்டும்?

(ஆழ்வார்கள் தந்த தமிழ்=திருவாய்மொழி முதலான திவ்வியப் பிரபந்தங்கள்; அரிதில்பெய்து=அருமையாக அமைத்து; பாரகாவியம்=பெருங்காவியம்; ஏழ்நிலே= ஏழடுக்குக்கு மேல்)

53 இல்லாத தெதுவுமிலே! எத்தனையெத்
தனையறங்கள்? இயல்புக் கேற்ற
சொல்லாலும் பொருளாலும் துலக்கமுறத்
திகழ்கின்ற தோற்றம் கண்டோம்!
வல்லோர்க்கும் வல்லோனுய் வகுத்துரைத்த
கம்பனது வாக்கு வன்மை
நல்லோர்க்கு மகிழ்வூட்டும்; தமிழ்த்தாயின்
தவப்பேறு நவிலல் பாற்ருே?

(துலக்கமுற = விளக்கமுற; வல்லோர் = திறமை மிக்கோர்; வாக்குவன்மை=சொல்லாற்றல்; நவிலல் பாற்ருே=சொல்லும் தன்மைத்தோ?)

54 "அன்புருவாய்த் திகழ்கின்ற பரதனுக்கே
ஆயிரம் ராமருமிணேயாய் ஆக மாட்டார்"
என்றுரைத்த குகன் கூற்றும், "எண்ணில் கோடி
இராமரெனினும் அருளுக் கருகா வாரோ?"
என்றருளிச் செய்தகோ சலேயின் வாக்கும்,
இணேயில்லாப் பரதனது பெருமை காட்டும்!
நன்றுரைத்த கம்பனேயே போற்றுமாறென்?
நாயகனும் பரதனுக்குத் தம்பி யேயோ?

(அன்புரு=அன்புவடிவம்; கூற்று=வாக்கு; அருளிச் செய்த=சொன்ன; நன்றுரைத்த=நன்ருகக் கூறிய; அருகாவாரோ=அருகில் நிற்பாரோ) "ஆயிரம் ராமர் நின்கேழ் ஆவரோ" "எண்ணில்கோடி ராமர்கள் என்னினும் அண்ணலேநின்அருளுக் கருகாவரோ" என்பன கம்பன் பாடல்கள்.

55 போருக்கு வருகின்ற கும்ப கர்ணன்
புறப்பட்டு வருகின்ற செய்தி கேட்டோர்
யாருக்கும் மனமுருகும் ''வென்று மீள்வேன்
யானென்று கூறுகிலேன் விதியீங் கென்னைப்
போருக்குப் போவென்று பிடித்துத்தள்ளும்
பொன்றுவேன்'' என்றுரைத்த மாற்றம்கேளீர்!
பாருக்குச் சிறந்ததொரு காவியத்தைப்
படைத்தளித்த கம்பனையென் பகரு மாறே?

(வென்று=வெற்றிபெற்று ''வென்றிவண் வருவனென்றுரைக்கிலேன் விதி நின்றது பிடர் பிடித்துந்துகின்றது'' என்பதுகம்பன்பாடல். மாற்றம்=கூற்று; என்பகருமாறு= புகழ்ந்துகூறும் விதம் யாது?)

56 உலகுய்யத் தோன்றிய தோர் உண்மை நூலாய்,
உறுதிபயக் கின்றதோர் உயர்ந்த நூலாய்,
கலைகளனைத் தையும்வளர்த்துக் காக்கும் நூலாய்,
காலத்தை வென்று நிற்கும் கனத்த நூலாய்,
பல சமய நெறி போற்றும் பண்பார் நூலாய்,
பார் புகழும் நீதியெலாம் பகரும் நூலாய்,
நலமெல்லாம் நிறை நூலாய்க் கம்பன் தந்த
நன்னூலைப் பயிலுவதே நமக்கு வேலை

(உலகுய்ய=உலகம் வாழ; உறுதி பயக்கும்=உறுதிப் பேறுதரும்; கனத்த=கனம் தங்கிய; பகரும்=கூறும்; நிறை நூல்=நிறைவானநூல்; நன்நூல்=நன்மைதரும் நூல்; பயிலுதல்=எப்போதும் படித்தல்)

57 கற்றவர்க்கு மகிழ்வூட்டும் கம்பன் பாட்டில்
கருத்தூன்றவேறெதில்தான் கவனம்செல்லும்?
பெற்றியெல்லாம் எடுத்துரைத்துப் பேசலாமோ?
பெருமைக்கோர் எடுத்துக்காட் டிதுவேயன்றோ?
நற்றவத்தின் இறைகம்பன் நவின்ற பாடல்
நலமெல்லாம் விரித்துரைக்க நானோ வல்லேன்?
சிற்றறிவின் ஆசையினால் செப்பலானேன்
சிந்தனை ஏன்? ஆசைவெட்கம் அறியாதன்றோ?

(மகிழ்வூட்டும் = மகிழ்ச்சிதரும்; கருத்தூன்ற = மனம் நிலைக்க; நவின்ற = கூறிய; சிற்றறிவு = சிறிய அறிவு; சிந்தனை = யோசனை)

58 குறையுடைய பாத்திரமாய்த் தாரை தன்னைக்
கூறுவான் வான்மீகி; ஞானக் கம்பன்
தறையிடைநல் லொழுக்கத்தில் சிறந்தா ளாகச்
சாற்றுகிறான்; அவள்கொண்ட விதவைக் கோலம்
நிறை மனத்து லக்குவனைத் தாயர் தம்மை
நினைந்துநைந் திடவைத்த செய்திகேட்போர்,
முறையறிந்து புலமையறம் பெண்ணறத்தை
முழுதுமாய்க் காத்தோம்பும் முறைகாண் பாரே!

(தாரை = வாலியின் மனைவி; வான்மீகி, வாலியிறந்த பிறகு சுக்ரீவனுடன் வாழ்ந்ததாகக் கூறுகிறார். பெண்ணறம் பிழையாது காப்பதே புலமையறம்)

59 வாழ்க்கையிலே பெறும் பேறு பலவற் றுள்ளும்
வளர்புக ழோன் கம்பனது காவியத்தை
ஆழ்ந்துபடித் தனுபவித்தல் அரிய பேறும்
ஆன்மானு பவத்தினுமீ துயர்ந்த தன்றோ?
சூழ்நிலையை மாற்றியிந்த உலக வாழ்வைச்
சுவர்க்கவாழ் வாக்குகின்ற பாடலன்றோ?
ஏழ்கடல்சூழ் புவியினிலே கம்பனுக் கோர்
இணையான கவிஞனினிப் பிறப்ப துண்டோ?

(பெறும்பேறு = அடைய வேண்டிய பேறுகள்; ஆன்மானுபவம் = ஆன்மஞானத்தா லுண்டாகும் தெய்வானுபவம்; ஏழ்கடல் = ஏழு கடல்)

60 கவியுலகப் பேரரசன் கம்ப னுக்குக்
கட்டியம்கூ றிடும் புலவர் தாமிங் குண்டு
புவிமுழுதும் தேடிடினும் மில்டன் ஹோமர்
புகழ் மிகுதாந் தே,விர்ஜில், சேக்ஸ்பியர்
இவரெல்லாம் கம்பனுக்கு நிகரா வாரோ?
இணையாவார் இங்குதான் யாவருள்ளார்?
செவிகளுக்குத் தேனன்றோ கம்பன் பாடல்?
தெவிட்டாத அமுதுக்குச் சமம்வே றுண்டோ?

(பேரரசன்=சக்கரவர்த்தி; கட்டியம்; பராக்குபுவி= உலகம் மிலிட்டன், ஹோமர், தாந்தே, விர்ஜில்; சேக்ஸ்பியர் முதலியோர் மேலைநாட்டுக் கவிஞர்கள்)

61 பிறரெவரும் சென்றறியாப் பிரதேசம் எங்கும்
பீடுநடை நடந்துசென்ற பெரும்புலவன் கம்பன்!
திறமான புலமையவன் புலமையே கண்டீர்!
தேசத்துப் புலவரெலாம் தலைவணங்கி நிற்பார்!
அறம்பொருளோ டின்பமெனும் அவைமூன்றன் திறத்தை
அற்புதமாய் வடித்தளித்த பெரும்புலவன் அவனே!
நிறைஞான நல்விளக்காய் நீணிலத்துக் கெல்லாம்
நித்தியநல் லறிவொளியைப் பரப்புவதாரறியார்?

(பிரதேசம்=நுட்பமான இடங்கள்; பீடுநடை=கம்பீர நடை திறமான=வலிமைமிக்க; கண்டீர்=காணுங்கள்; நீணிலம்=பெரிய உலகம்; நித்தியம் நிலைபேறு)

62 கதைசொல்லும் வேகத்தில் கற்பனையின் எழுச்சி!
கருத்துக்குக் கருத்தினிமை! சொற்சுத்தப் பொலிவு!
விதம்விதமாம் சந்தங்கள்! வேலைப் பாட்டருமை!
வேரூன்றித் தழைத்துயர்ந்த வித்தகத்தின் மேன்மை
'இதுபுதுமை' எனக்கூறிக் கற்றறிந்தோ ரெல்லாம்
எந்நாளும் போற்றுகின்ற கவித்துவத்தின் சீர்மை!
புதையல்களாய்ப் பொலிகின்ற பொருளாழப் புதுமை!
புத்தமுதம் எனும் கம்பன் புகழ்பாடல் காணீர்!

(கற்பனையின் எழுச்சி=விதம்விதமான கற்பனைகளின் உதயம்; சொற் சுத்தப் பொலிவு=சொல் தூய்மையின் சிறப்பு; வேரூன்றி=வேர்விட்டு; சீர்மை=மேன்மை; பொருளாழம்=ஆழ்ந்த பொருள் சிறப்பு; புத்தமுதம்= புதிய அமுதம்; புகழ்ப்பாடல்=புகழ்மிக்க பாடல்கள்)

63 இதயத்தை விரிவாக்கி இன்பம் சேர்க்கும்
எந்நாளும் அழியாத அன்பை ஆர்க்கும்
விதமொத்த நடையழகில் வியப்பைக்கூட்டும்
வெவ்வேறு வருணனைகள் சிறப்பைக் காட்டும்
பதத்துக்குப் பதமுயர்ந்த பண்பை ஆக்கும்
பக்குவமாய் அஞ்ஞான இருட்டை நீக்கும்
கதைசொல்லும் வேகத்தில் கருத்தை ஈர்க்கும்
கம்பன்செய் ரசவாதக் கலைதான் என்னே!

(இதயம்=இருதயம்; ஆர்க்கும்=பொருந்தச் செய்யும்; கூட்டும்=சேர்க்கும்; ஆக்கும்=உண்டாக்கும்; அஞ் ஞானம்=அறியாமை; ரசவாதக்கலை=இரும்பைப் பொன்னாக்கும் வித்தை)

64. எண்ணத்தை விடவுயர்ந்த வேகம் காட்டி
இறகுகட்டிப் பறக்கும் கற்பனையின் கூட்டம்!
கண்ணுக்குப் புலப்படா நுட்பக்காட்சி!
கருத்துக்கு விருந்தாகும் புதுமை மாட்சி!
மண்ணுக்குப் புத்துணர்ச்சி! மாளா இன்பம்!
மாமாயப் பொய்மைக்கோ மீளாத் துன்பம்!
பண்ணொத்த மெஞ்ஞானப் பாடல் வெள்ளம்!
பாவேந்தன் கம்பனே எமக்குத் தெய்வம்!

(நுட்பக்காட்சி = நுட்பமான காட்சி; புலப்படா=புல னாகாத; மாளாஇன்பம்=குறையாத இன்பம்; மீளா= மீள முடியாத; பண்ஒத்த=இசைநலம்கலந்த; மெய் ஞானம்=மெய்யறிவு)

65. ''உலகுய்யச் சிறைபுகுந்தாள் ஏற்றம் கூறும்
உயர்ந்ததொரு காவியமே ராம காதை''
இலகுதவ முனிவன்வான் மீகி சொல்லும்
இயன்மொழியீ தெத்தனைபேருண்மைத்தாகும்!
திலகமெனக் கருவறையில் திகழும் தெய்வம்
திருமகளாம்! சானகியே கதையின் மையம்!
நலமிகுகோ புரம்கோயில் மண்ட பங்கள்
நாம்வணங்கும் தெய்வமவையாவ துண்டோ?

(''சீதாயசரிதம்மஹத்'' என்பது வான்மீகி வாக்கு. இலகு=விளங்கும்; இயன்மொழி=இயல்பான உண்மை மொழி; திலகம் = நெற்றிப் பொட்டு; கருவறை= கர்ப்பக் கிருகம்; (உண்ணாழி என நூல் கூறும்) நலமிகு= நன்மை மிகுந்த; மையம்=நடுவிடம் (கேந்திரம்)

66. ''பெண்மையினைச் சிறப்பிக்கக் கம்பன் கூறும்
பெருநூலே ஈதென்னும்'' பேச்சுக் கேற்ப,
உண்மைநிலை உலகறிய உரைத்துச் சென்றான்!
உரைநலத்தால் பெண்மை யறம்
உணர்த்து கின்றான்!
மண்முழுதும் உயக்கொண்ட வீர னுக்கும்
மாண்புதரும் தவச்சீதை மகிமை காட்டும்
எண்ணுதற்கும் அரியதவம் ''காண நோற்றான்
இல்லை''யெனும் அனுமன் சொல்இதுவே சாட்சி

(வீரன் = இராமன்; உயக்கொண்ட = காத்துநின்ற; மாண்பு=உயர்வு; எண்ணுவதற்கும்=நினைப்பதற்கும்; ''மாண நோற்றீண்டிவள் இருந்தவாறெலாம், காண நோற்றிலன் அவன் கமலக் கண்களால்'' என்பது. அனுமன் வாக்காகக் கம்பர் கூறுவது.

67. படிப்பவர்தம் மனத்தினிலே ஆழ்ந்து சென்று
பதிந்திடச்செய் திடுகின்ற பான்மை ஒன்றோ?
நொடிக்குளிந்த வையத்தார் மனத்தி லெல்லாம்
நுழைந்தவர்க்குப் புதுவாழ்வும் புதிய தெம்பும்
எடுத்தளித்து மகிழ்வூட்டும் விதமென் சொல்ல?
எண்ணத்தைச் சொல்லாக்கும் இந்த்ர சாலம்!
தொடுத்திடும்சொல் லோவியங்கள்;
வல்லோன் கம்பன்!
சொற்கோயில் ராமனுக்கே வியப்பை யூட்டும்!

(ஆழ்ந்துசென்று=ஆழமாகச்சென்று; பதிந்திட=நன்கு பதியும்படி; நொடிக்குள் = ஒரு வினாடி நேரத்தில்; வையத்தார் = உலகமக்கள்; எடுத்தளித்து=எடுத்துத் தந்து; இந்த்ரசாலம்=மாயவித்தை)

68. உணர்வுகளுக் குருக்கொடுத்துப் பேச வைக்கும்
ஒப்பரிய பெரும்புலவன் கம்பன் அன்றோ?
குணம்கடந்த பரம்பொருளே மனித னாகிக்,
குவலயத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து காட்டி,
மணம்புரிந்து, முடிதுறந்து, கானம் சென்று,
மாமுனிவர்க் குறவாகிப், பகையை வென்று,
அணங்கினைமீட் டருளியதொல் காதை தன்னை
அற்புதமாய்ப் படைத்தளித்தான்!
ஆற்றல் என்னே!

(உணர்வுகள்=உணர்ச்சிகள்; உரு=வடிவம்; குணம் கடந்த = குணங்களையெல்லாம் கடந்துநிற்கின்ற; பரம்பொருள்=மேலானபொருள்; குவலயம்=உலகம்; வாழ்வாங்கு=வாழும் விதம்; அணங்கு=சீதை)

69. கம்பீர மானநடை! கருத்தில் ஆழம்!
காட்சிக்குக் காட்சிகண் கொள்ளா மாட்சி!
எம்பிரான் பெருமையினை எடுத்துக் கூறும்
எண்ணரிய தோத்திரங்கள்! பக்திப் பூங்கா!
தம்பியர்தம் தனிச்சிறப்பு! தாயர் மேன்மை!
தந்தையவர் மெய்வடிவம்! தகவின்ஆட்சி!
கம்பருக்கே எளிதலது தேவர்க்கும் அரிதாம்!
காவியமோர் பேருலகம் காணுவோர்க்கே!

(மாட்சி = பெருமை; தோத்திரம் = துதிப்பாடல்; பக்திப்பூங்கா=பக்திச்சோலை; தாயர்=தாய்மார்கள்! மெய்வடிவம்=வாய்மைஉருவம்; தகவு=மேன்மை)

70. பாட்டுக்குப் பாட்டின்பம் பரிம ளிக்கும்
பண்பாட்டின் நெறிகாட்டி அறம் வளர்க்கும்
நாட்டுக்கோர் விளக்காகி ஒளியை யீயும்
நாகரிகம் அனைத்துக்கும் நிலையம் ஆகும்
கேட்டுக்கு வாளாகி வெட்டிச் சாய்க்கும்
கேள்விக்கிங் கமுதாகித் துன்பம் மாய்க்கும்
ஈட்டுபெரும் தவம்தானோ? இந்த நாட்டில்
எம்கம்பன் வந்துதித்த தெமது பேறே!

(பரிமளிக்கும்=மணம்வீசும்; ஈயும்=தரும்; நிலையம்= சாய்க்கும்=வீழ்த்தும்; மாய்க்கும்=அழிக்கும்; பேறு= இடம்; பாக்கியம்)

71. சங்கத்துச் சான்றோர் எல்லாம்
தாமொரு வடிவு கொண்டே
இங்கிதக் கம்ப னாக
இங்கவ தரித்து வந்து
பங்கமில் காப்பி யத்தைப்
பகர்ந்தனர் இதுதான் உண்மை!
இங்கிதோர் மனித னாலே
இயற்றுதற் கியல்வ தேயோ?

(சங்கத்துச் சான்ருேர் = சங்ககாலப்புலவர்கள்; வடிவு= உருவம்; இங்கிதம் = அழகு; அவதரித்து = பிறந்து; பங்கம் இல் = குறையில்லாத; காப்பியம் = இராமாயணம்; இயல்வதேயோ = முடியுமானதோ?)

72. காலத்தை வென்று நிற்கும் காவியம்
படைத்துக்கம்பன்
ஞாலத்தை வாழ வைத்தான்; நல்லறம்
பொலியச் செய்தான்!
பாலொத்த பாடல் வெள்ளம் பாய்ந்ததால்
தமிழ் நன்ஞடு
ஞாலத்துள் முதன்மை பெற்று நான்மறை
நெறிபே ணிற்றே!

(ஞாலம் = உலகம்; நல்லறம் = நன்மைதரும் அறநெறி; பொலிய = விளங்க; பால்ஒத்த = பால்போன்ற; நான்மறை நெறி = வேதமார்க்கம்; பேணிற்று = விரும்பிப்போற்றியது)

73. கற்ருேர் இதயம் களிகூரக்
கம்பன் தந்த கவியமுதம்
பெற்ருே ரென்று தமிழர்தமைப்
பிறநாட்டாரும் போற்றிடும்பே
றுற்ருே மன்ருே? மற்ருேரும்
உவந்து தமது தாய்மொழியில்
கற்று மகிழும் காட்சியெலாம்
கண்ணுக் கினிய விருந்தன்ருே?

(இதயம் = உள்ளம்; களிகூர = மகிழ்ச்சிகொள்ள; பேறுஉற்ருேம் = பேற்றையடைந்தோம்; மற்ருேர் = பிறமொழியாளர்கள்; தமது தாய்மொழியில் கற்று = தமது தாய்மொழியில் மொழிபெயர்த்துப் படித்து)

74. ''செவிக்குத் தேனென ராகவன்
புகழினைத் திருத்தும்
கவிக்கு நாயகன்'' எனும்மொழி
கம்பனுக் கேற்கும்
புவிக்கு நாயகன் புகழினை
அவனலால் யாரே
கவிக்குள் தேக்கிவைத் தமுதெனக்
காட்டிட வல்லார்?

(''செவிக்குத் தேன் என'' எனத் தொடங்கும் பாடல் அனுமனைக் கம்பன் புகழ்ந்து கூறுவது. அது கம்பனுக்கும் பொருந்துவதாயுள்ளது. கவிக்குநாயகன்= கவிஞர்களுக்குத் தலைவன்: புவிக்குநாயகன்=ஸ்ரீராமன்; தேக்கி=நிறைத்து.)

75. ''சொல்லின் செல்வ'' னென்றனுமனைத்
துதிசெயும் வாய்மை
எல்லை யில்புகழ்க் கம்பனுக் கேயது
பொருந்தும்!
வில்லின் வெற்றியை விரித்துரை செய்தன
வெல்லாம்
சொல்லி யாவதோ? அவன் புகழ்
சொல்லியேத் திடுவாம்

(''யார் கொலிச் சொல்லின் செல்வன்'' என்பது ராமபிரான் வாக்கில் வைத்து அனுமானைப் பற்றிக்கூறிய கம்பன்வாக்கு. வில்லின் வெற்றி=வில் வீரம்; சொல்லி யாவதோ=சொல்ல முடிந்ததுவோ?)

76. ஏக தாரநல் விரதத்தின்
ஏற்றமும், வில்லின்
வேக வென்றியும்,
வீரமும், விளங்கிய புகழும்,
மேக மன்னதோர் வண்மையும்,
மேன்மையு மெல்லாம்
மாகவித் திறத் தடக்கிய
மாண்பிவண் என்னே!

(ஏகதார விரதம்=ஒருவனுக் கொருத்தி என்று உறுதியான விரதத்துடன் வாழ்வது; வேகவென்றி=வேகமான வெற்றி; மேகமன்னதோர் வண்மை=மேகம் போல வரையாது வழங்கும் கொடைப்பண்பு; மாகவித்திறம்= சிறந்த கவியின்திறம் இவண்=இங்கு) ''ஒரு இல், ஒரு வில், ஒரு சொல்'' என்ற உண்மை கருதத் தக்கது.

77. நல்ல தோர்பெருங் காவியம்
நவிலுதற் கென்றே
வல்ல ஞயிவண் வந்தவ
தரித்தனன் கொல்லோ?
நல்லன் நல்லனென் றருந்தமிழ்
நாவலர் எல்லாம்
சொல்லி வாழ்த்திடும் கம்பனேச்
சொல்லுமா றெதுவோ?

(நவிலுதற்கு = சொல்வதற்கு; வல்லன் = வல்லவன்; கொல்=வினு; நல்லன்=நன்மைமிக்கவன்; அருந்தமிழ்= அரியதமிழ்; நாவலர்=புலவர்)

78. ஏத்தும் வென்றி இலக்குவன்
இயல்பினேத் திறனே
நாத்தி றத்தினுல் கம்பனல்லா
லெவர் நவில்வார்?
காத்து நின்றவக் காட்சியைக்
கண்ணெதிர் நிறுத்தும்
பாத்தி றத்தினேப், பான்மையைப்
பாடுதல் எளிதோ?

(ஏத்தும் = எல்லோரும் சொல்லிப்புகழும்; வென்றி= வெற்றி; நாத்திறம் = நாவன்மை; பாத்திறம்= பாவன்மை; எளிதோ=எளிமையோ; காத்து நிற்பதைக் கூறும் பாடல் ''அல்லே யாண்டமைந்த மேனி'' எனத் தொடங்கும் அறியபாடல்)

79. மன்னர் மன்னவன் கேகயன்
மகளினுக் கீந்த
தென்ன நின்றவவ் விருவரம்
கலவரம் விளைக்க,
மன்னன் ராமனுக் கீந்தநல்
வரமவை இரண்டும்
நன்ன ரோங்கிநல் அமைதிசெய்
நலன் நவில்வதுவோ?

(மன்னர் மன்னவன் = தயரதன்; கேகயன்மகள்= கைகேயி; ஈந்த = கொடுத்த; கலவரம் = குழப்பம்; நன்னர் = நன்மையாகி அமைதி = சாந்தம்; நலன்= நன்மை; நவில்வதுவோ= சொல்லமுடிந்ததோ)

80. மறம் நினைந்தவர் கிளையுடன்
மடிவரென் பதனை
அறம் நினைந்திடா தாற்றலால்
தீவினை புரிவோரா
திறம் தனைத்தச முகன்கதை
செப்பிடும் அன்றோ?
அறம் தழைத்திடக் கவிமழை
பொழிந்த தற்புதமே!

(மறம்=பாவம்; கிளையுடன்=உறவினருடன்; மடிவர்= அழிவர்; தீவினை = பாவச் செயல்கள்; தசமுகன்= இராவணன்; அறம்= தர்மம்; கவிமழை= கவியாகிய மழை; அற்புதம்= அதிசயச் செயல்)

81. விதியின் வல்லமை, அதனையும்
மதியினல் வெல்லும்
புதிய சிந்தனை, அன்பறம்,
பொறுமைசான் ருண்மை
துதிசெய் யன்பருக்குக் கிரங்கிடும்
பரமனின் தொன்மை
அதிச யத்தமி ழாலணிந்
துரைத்தனன் அன்றோ!

(விதியின் வல்லமை = ஊழின் ஆற்றல்; மதியினுல்= அறிவினுல்; புதிய சிந்தனே = புதிய கருத்து; சான் ருண்மை= மேலான பண்புடைமை; துதிசெய்யன்பர்= வணங்கும் அன்பர்கள்; தொன்மை = பழமையான சிறப்பு; அணிந்து= அழகு படுத்தி)

82. எந்த நாட்டினில் எம்மொழி
யதனினும் புலவோர்
முந்து சீர்மிகு கம்பனுக்
கிணேயென மொழிதற்
கிந்த மாநிலத் தெத்திசை
யதனினும் இல்லே!
விந்தை யீங்கிவன் தமிழகத்
துதித்தது வியப்பே!

(முந்து சீர்= முற்பட்ட சிறப்பு; மொழிதற்கு= சொல்லு வதற்கு; இந்த மாநிலம்= இப்பெரியபுவி; எத்திசை= எந்தத் திசையிலும்; விந்தை= வியப்பு; உதித்தது= பிறந்தது)

83. கொடையினுக் கோர் இலக்கணமாய்க்
குறிப்பிடுதற் கொருவனும்
சடையப்ப வள்ளல் புகழ்
சரித்திரத்தில் நிலேத்திருக்கும்
படிசெய்த மெய்ப்புலவன்
பாவேந்தன் கம்பனது
நடையழகு நலம்பாட
நான்செய்த தவமுளதே!

(கொடை= வள்ளல்பண்பு; குறிப்பிடுதற்கு= குறிப்பிடு வதற்கு; மெய்ப்புலவன்= உண்மை நெறியுணர்ந்த புலவன்; நடை= மொழிநடை; தவமுளது= ஏதோ ஒரு தவம் இருக்கிறது)

84. கல்வியின் விரிவும் கற்பனைத் திறமும்,
காவிய இலக்கணப் பொலிவும்,
பல்விதத் துறையும் பாட்டினில் காட்டும்
பக்குவ நிலையும், நற் பொருளும்,
எல்லையில் புலமை, அனுபவ முதிர்ச்சி,
இவையெலாம் நிறைந்தஎம் கம்பன்
''கல்வியில் பெரியன்'' என்பதென்! இவனே
கலைமகள் வடிவென லாமால்!

(கல்வியின் விரிவு = கல்விப்பரப்பு; கற்பனைத்திறம்= கற்பனையாற்றல்; பக்குவநிலை=பாகப்பட்டநிலை; எல்லையில் = அளவில்லாத; அனுபவ முதிர்ச்சி = அனுபவத்தில் முதிர்ந்த நிலை; என்பதென்=என்று கூறுவது என்ன? இவனே கலைமகள்வடிவு எனலாம்; ஆல்=அசை)

85. பேரறிவும், அனுபவமும், பெரிதுமுடை
யவரேனும் பெருமை மிக்க
பாரகா வியம்பாட மனிதசக்தி
யொன்றுமட்டும் பயன்த ராது
பேரருள் சேர் தெய்வபலத் துணைவேண்டும்;
கல்விக்காம் பெரிய தெய்வம்
பாரதியின் பேரருட்குப் பாத்திரமா கியகம்பன்
படைப்பீ தன்றோ?

(பேரறிவு = மிகுந்த பெரிய அறிவு; பெரிதும் = மிகுதியும்? உடையவரேனும்=உடையவர் என்றாலும்; பாரகாவியம்=பெருங்காப்பியம்; கல்விக்காம்=கல்விக்கான; பாரதி=சரஸ்வதி; படைப்பு=சிருஷ்டி)

86. பொதுநிலை நின்று புகன்றிடும் அறமும்,
புகலரும் சத்திய நெறியும்,
புதுமையின் பொலிவும், பூரணத் துவத்தின்
பொற்பினை விரித்திடும் திறமும்
இது விதென் னென்று கற்றவர் வியந்தே
ஏத்திடும் கவித்திற வளனும்
மதுவினும் இனிய சுவையுட னியங்கும்
மாட்சியும் கம்பனின் மாண்பே

(பொதுநிலை = எல்லாச் சமயங்களுக்கும் பொதுவான நிலை; புகன்றிடும் = கூறும்; சத்திய நெறி = மெய்நெறி; பூரணத்துவம் = முழுநிறைவான பொருள்; பொற்பு = சிறப்பு; மதுவினும் = தேனைவிட; இயங்கும் = சஞ்சரிக்கும்; கம்பனின் = கம்பனது காவியத்தின்; மாண்பு = பெருமை)

87. மலர்களில் செந்தா மரை சிறந்தது போல்
மலைகளில் சிறந்ததிங் கிமயம்
நலமிகு நகரில் காஞ்சியே சிறப்பு
நாட்டினில் பாரத நாடு
பலர் புகழ் கம்பன் பாடலே பாடல்
பாவலன் கம்பனே யாமால்
இலையென மறுப்போர் எவருளர்? புவியில்
இணையிலாக் காவியம் இதுவே

(செந்தாமரை மலர்களில் சிறந்தது. மலைகளில் இமயமலை. நகரங்களில் காஞ்சி. நாட்டினில் பாரதநாடு. பாடல்களில் கம்பன்பாடல். பாவலர்களில் கம்பன். உலகப்பெருங் காவியம் கம்பன் காவியமே)

88. கவிச்சக்ர வர்த்தி கம்பநாட் டாழ்வார்
கற்றவர் மனம்மிகக் களிக்கப்
புவிபுகழ் ராம காதையென் றுலகோர்
போற்றுமோர் காவியம் தந்தான்!
நவையிலிந் நூல்நம் நாட்டவ ரன்றி
நன்மைதேர் பிறரையும் கவர்ந்து
குவித்திடும் கரத்தால் கும்பிடச் செய்யும்
குவலயம் போற்றிடும் குணமே

(கவிச்சக்ரவர்த்தி = கவிஞர்களுக்குப்பேரரசர்; நவை = குற்றும் நன்மைதேர் = நல்லதைத் தேர்கின்ற; பிறர் = நாட்டவர்; குவித்திடும்கரம் = கூப்புகின்ற கைகள்; குவலயம் = உலகம்)

89. அன்னையே அனையாள் அருந்தவன் பன்னி
அகலிகை தன்னைப்பிற ரெல்லாம்
சொன்னதை அறிவோம் ''நெஞ்சினுல் பிழை''யில்
தூய்மை சேர் ''மாசறு கற்பின்''
நன்னலம் மிக்க ''அணங்கென'' நவின்ற
நயமிகு கம்பனை யல்லால்
மன்னவன் ராமன் மனத்தினுக் கேற்ப
மற்றெவர் உரைத்திட வல்லார்?

(அன்னையே அனையாள் = அன்னைபோன்றவள்; அருந்தவன்=கொதமர்; பன்னி=மனைவி; மாசறு=குற்றமற்ற; அணங்கு = தெய்வமகள்; நயமிகு கம்பன்= நீதியைஉணர்ந்த கம்பன்; ஏற்ப=பொருந்த) ''நெஞ்சினுன் பிழைப்பிலாள்'' ''மாசறுகற்பின் மிக்கஅணங்கு'' என்பன ராமன் கூற்ருகக்கம்பன் கூறுவனவாகும்.

90. குலமுறை கிளத்தும் கோசிகன் உரையும்
கோதிலாச் சனகனின் நிலையும்
வலமிகு சிவன்வில் வந்ததும் முனிவன்
மற்றதன் வலியுரைத் ததுவும்
சிலைவலோன் எழுந்து சென்று வில்முறித்த
செய்தியும் செப்பிடப் போமோ?
நலமிகு கம்பன் நடத்தியே காட்டும்
நாடக பாணிஎன் னென்போம்!

(குலமுறை = சூரியகுலவரலாறு; கோசிகன் = விசுவாமித்திரன்; கோதிலா=குற்றமற்ற; வலம்=வலிமை, சிவன்வில் = சிவதனுசு; சிலைவலோன் = வில்வீரனுன ராமன்; நலமிகு= நன்மை மிகுந்த)

91. அடைக்கலம் அடைந்த வீடணன் தன்னை
ஆதரித் தருளிய பரிசும்,
படைக்கலம் இழந்து தவித்தரா வணனைப்
பரிவுடன் 'நாளைவா' வென்று
விடுத்திடும் பண்பும் காசிலாக் கொற்ற
வீரமும், விரித்தருந் தமிழில்
வடித்தெடுத் தளித்த கம்பனைப் பயின்று
வாழ்வதே வாழ்வென லாமால்

(அடைக்கலம் = சரணுகதி; பரிசு = தன்மை; படைக்கலம் = ஆயுதம்; பரிவுடன் = அன்போடு; விடுத்திடும் பண்பு = இன்றுபோய் போர்க்கு நாளைவா எனக்கூறிய பண்பு; காசிலாக்கொற்றம் = குற்றமற்ற வெற்றி; பயின்று = படித்து; கம்பனை = கம்பன் காவியத்தை; ஆல் = அசை)

92. வாட்ட மிலாச் செந்தமிழில்
வகைவகையாம் விருத்தங்கள்
கேட்டவர்கள் உளம் உவப்பக்
கேடில் சீர் ராம கதை
நாட்டவர்க்குத் தந்த வொரு
நாயகனும் கம்பனது
பாட்டழகைப் பாடுதற்குப்
பாக்கியமென் செய்தேனே?

(வாட்டம் = தளர்ந்து வாடுதல்; வகை = விதம்; கேடில் = தீமையில்லாத; சீர் = பெருமை; நாட்டவர் = நாட்டுமக்கள்; தந்து = செய்துதந்த; பாட்டழகு = பாடலின் அழகு; பாடுதற்கு = பாட; பாக்கியம் = பேறு)

93. உலகியல் அறிந் துரைக்கும்
உத்தமக் கவிஞன் என்கோ?
பலகலை தெரிந்து பாடும்
பாநலம் வல்லோன் என்கோ?
நலமிகு கணிதம் வானூல்
நாட்டியக் கலைகள் வல்ல
புலமையில் சிறந்த கம்பன்
புகழையென் உரைக்கு மாறே?

(உலகியல் = உலக இயல்பு; உத்தமக் கவிஞன் = சிறந்த கவிஞன்; பலகலை = பலவிதமான கலைகள்; என்கோ = என்று சொல்வேனே; நலமிகு = நன்மை மிகுந்த; கணிதம் = எண்ணூல்; வானூல் = வான சாஸ்திரம்; நாட்டியக்கலை = நடனக்கலை)

94. தத்துவ ஞானி என்கோ?
தகுந்தவிஞ் ஞானி என்கோ?
வித்தகக் கவிஞன் என்கோ?
வேத்துநூல் அறிஞன் என்கோ?
எத்திறத் தெவையும் வல்ல
ஈடிலா நிபுண ஞய
மெய்த்தவக் கம்பன் சீர்மை
விளம்புமா றறிகி லேனே!

(தத்துவஞானி=மெய்யுணர்வுடைய ஞானி; தகுந்த=தகுதியுள்ள; விஞ்ஞானி=அறிவியல் அறிஞன்; வேத்துநூல்=அரசியல்நூல்; நிபுணன்=வல்லுநன்; அறிகிலேன்=அறிந்திலேன்)

95. முன்ஞேர் சொல் பொருள் அனைத்தும்
மொண்டு மொண் டிதுதான் என்று
பின்ஞேர்தன் வழியைப் பற்றப்
பேசிய கம்பன் அல்லால்
பன்ஞேக்கும் நிறைந்த பார
காவியம் இதனைப் போலச்
சொன்ஞேக்கும் பொருள்நோக் கோடு
சொன்னவர் பிறருள் ளாரோ?

(முன்ஞேர்=காலத்தால் முற்பட்ட புலவர்கள்; பின்ஞேர்=பிற்பட்டோர்; பன்ஞேக்கும்=பலவிதமான சிறப்புகள்; சொன்ஞேக்கும்=சொல்லழகும்; பொருள்நோக்கு=பொருள் அழகு; பிறருள்ளாரோ=பிறர் இருக்கிருர்களோ?)

96. சொற்றவை அனைத்தும் கேட்டுச்
சொல்வலோர், அறிஞர், மேலோர்
கற்றவர் ''பாடும் வாய்மைக்
கடவுளே'' என்று போற்றும்
சொற்றிறம் வல்ல கம்பன்
சொற்பொருள் தெரிந்து போற்றக்
கற்றிலேன்! புகழைப் பாடக்
காமுற்றேன்! நாணுவேனே?

சொற்றவை = கூறியவை; சொல்வலோர் = புலமை வல்லவர்கள்; சொற்றிறம் = சொல்லாற்றல்; காமுற்றேன் = ஆசைப்பட்டேன்; நாணுவேனே = வெட்கப் படுவேனே; (ஆசை வெட்கமறியாதல்லவா)

97. அளவையால் அறிய லாகா
அறிவினப் புறத்தே செல்லும்
உளவையார் அறிய வல்லார்
உபநிட தங்கள் ஓதும்
கிளவியார் பொருளை யெல்லாம்
கிளத்திடும் கம்பன் சீர்மை
அளவையார் அறிவர் அந்தோ!
அளவிலாப் பெருமைத் தன்றே!

(அளவையால் = எந்த அளவிலும்; அறியலாகா = அறிய முடியாத உளவு = ஒற்றுராய்வது; கிளவி = சொல்; கிளத்தல் = கூறுதல்; பெருமைத்தன்றே = பெருமை யுடையதல்லவா?)

98. செய்தமா தவமோ? அல்லால்
செந்தமிழ்ப் புலமைப் பேறோ?
பெய்திறம் எல்லாம் பெய்து
பேசிய கம்பன் காதை
பொய்மையில் உளத்தோர்க் கெல்லாம்
புளகிதம் அரும்புச் செய்யும்
செய்திறம் அறிகிலேன் யான்!
செப்புமா றுணர்ந் திலேனே!

(மாதவமோ = சிறந்த தவமோ; பெய்திறம் = முடிந்த வல்லமை; காதை = காவியம்; புளகிதம் = புளகாங் கிதம்; அரும்ப = தோன்ற; செய்திறம் = செய்யும் வகை; அறிகிலேன் = அறிந்தேனில்லை)

99. மற்றினித் தவம்வே றுண்டோ?
மாதவக் கம்பன் செய்த
நற்றமிழ்க் காப்பி யத்தை
நாள்தொறும் கற்போர் கேட்போர்
உற்றபே ரின்பம் எண்ணில்
உம்பரும் விழைந்து போற்றப்
பெற்றிடும் பேறும் என்று
பேசலாம் பிறிதொன் றுமோ?

(வேறுண்டோ = வேறு இருக்கிறதோ; நற்றமிழ்= நல்லதமிழ்; உற்ற= அடைந்த; எண்ணில்= நினைத்தால் உம்பரும்= தேவர்களும்; விழைந்து= விரும்பி; பிறி தொன்றுமோ= வேறுஒன்றாகுமோ?)

100. உதியன்றன் வரையி னின்றும்
ஒழுகிய சுவைத் தீந் தேனே?
பொதிகையின் தென்றல் காட்டும்
பொற்பதோ? கனியின் சாறே?
துதி செயும் மலர் நன்னாட்டின்
தூய்மை சேர் மணமோ? ஈங்கு
எதுவெனக் கூறு கிற்பேன்?
எழிற் கம்பன் காவி யத்தை!

(உதியன் = சேரன்; வரை = மலை; பொதிகை= பாண்டிய நாட்டுப் பொதிகைமலை; பொற்பதோ= சிறந்த தன்மையோ; மலர்நாடு= சோழநாடு; துதி செயும்= புகழும்; எழில்= அழகு

101. ஈசன்றன் அருளோ? வீணை
இன்னிசை தானே? தேனே?
பேசரும் இன்பப் பேறே?
பெருமை சேர் அமுதோ? அல்லால்
மாசில் நல் மனத்து மாண்போ?
மலர்ப் பொழில் தானே? வானே?
வீசுதொல் புகழ்சேர் கம்பன்
விரித்துரை செய்த காதை!

(ஈசன் = இறைவன்; இன்னிசை = இனிய இசை; பேசரும் = கூற இயலாத; மாசில் = குற்றமில்லாத; மலர்ப்பொழில் = மலர்ச்சோலை; வீசு = பரவிய; தொல்புகழ் = பழமையான புகழ்

102. சவியுறத் தெளிந்து தண்ணென்
றொழுக்கமும் தழுவிச் செல்லும்
கவிதையின் மருமம் தன்னைக்
கண்டவர் அனுப வித்துப்
புவியினுக் கணியாம் என்று
போற்றுவர்; கம்பன் தந்த
செவிநுகர் கனிகள் அன்றித்
தேவர்தாம் அமுதும் வேண்டார்!

(சவியுற = விளக்கமுற; தண்ணென்று = குளிர்ந்து; கவிதை = பாடல்; மருமம் = நுட்பம்; செவிநுகர் கனிகள் = காதினால் அனுபவிக்கும் கவிதைகளாகிய பழங்கள்; அன்றி = அல்லாது)

103. வெண் சொல்லும் புதை பொருளும்
வெளிப் படுத்தும் கவி நயத்தை
நுண்ணுணர் வோர் போற்றிடுவர்;
நூலறிந் தோர் ஏத்திடுவர்
கண்முன்னே காட்சிகளைக்
காட்டி நிற்கும் அதிசயத்தை
எண்ணிவிய வாதார் யார்?
எம்கம்பன் வாழியவே!

(வெண்சொல் = வெளிப்படையாகப் பொருள் புரியும் சொல்; புதை பொருள் = ஆழ்ந்த பொருள்; நுண்ணுணர்வு = நுட்பமான அறிவு; எண்ணி = நினைத்து; வியவாதார் = வியக்காதவர்கள்)

104. மண்கொண்ட வெண்குடைசேர் மன்ன ரெல்லாம்
மகிழ்ச்சியுடன் வரவேற்றுச் சிறப்புச் செய்ய,
விண்கண்ட தேவதைகள் அனைத்தும் கூடி,
வியந்தாசி பல மொழிந்து வாழ்த்துக் கூற,
கண்கண்ட தெய்வமாம் தமிழ்த்தாய் உள்ளம்
களிகூர்ந்து கருணைமழை பொழிய, ஈங்கு
பண்கொண்ட செந்தமிழில் ராம காதை
படைத்தளித்த கம்பனையென் பாடுமாறே?

(மண்கொண்ட=நிலம் முழுதும் வென்ற; மன்னர்=சேர, சோழ, பாண்டியர்; விண்கண்ட = விண்ணுலகிலுள்ள; தேவதை=தெய்வம்; கூடி=சேர்ந்து; கண்கண்ட=கண்ணால் காணமுடிந்த; களிகூர்ந்து=மகிழ்ச்சிகொண்டு; பண்கொண்ட=இசை நலம் மிக்க; பாடுமாறு=பாடும் விதம்)

105. காவியப்பே ருலகினிலே செங்கோ லோச்சி,
கவித்துவத்தின் உச்சியிலே கொலு விருந்து,
பாவினிய தமிழ முதப் படைய லுண்டு,
பண்பாட்டுப் பூங்காவில் மகிழ்ந் துலாவி,
காவிரியைக் கங்கையுடன் இணைத்துக் காட்டிக்,
கவிதையினு லுலகத்தைக் காத்து நின்று,
நாவினிக்கும் ராமகதை நமக்குத் தந்த
நாவலனும் கம்பனையென் நவிலு மாறே?

(செங்கோலோச்சி=ஆட்சி செய்து; கொலுவிருந்து=கொலுவீற்றிருந்து; படையல் = அமுதம்; (நைவேத்தியம்); பூங்கா=மலர்ச் சோலை; நாவலன்=நாவன்மையுடையவன்; நவலுமாறு=சொல்லும் விதம்)

106. முத்தமிழின் சுவைகூட்டி, முன்னோர் சொன்ன
மொழிவழியே அறம்வளர்த்து, மெய்மை காத்து,
பத்திநெறி அறிவித்துப், பாதை காட்டிப்,
பழவினைக்கு விடை கொடுக்கும்மார்க்கம் கூட்டிச்,
சத்தியநன் னெறிநின்று, சமயம் பேணித்
தத்துவத்தின் விளக்கேந்திச், சான்றோ ரெல்லாம்
புத்தமுதம் எனப்போற்ற, ராம காதை
புகன்றருளும் கம்பனையென் புகழுமாறே?

(முத்தமிழ் = இயலிசை நாடகங்கள்; பழவினை = முற்பில் செய்த தீவினை; சத்தியநெறி = மெய்நெறி; பேணி = பாதுகாத்து; புத்தமுதம் = புதிய அமுதம்; புகன்றருளும் = சொல்லியருளிய; புகழுமாறு என் = புகழும் வகை யாது?)

107. நித்தியமாம் சத்தியத்தின்முரசு சொலிக்க,
நெடுந்தருமத் தேரேறிப் பாரோர் ஏத்தப்
பத்திநெறி யெனும்தனித்த பதாகை யேந்திப்
பண்பாட்டோ டொழுக்கமெனும்
பாதை தன்னில்
வித்தகராம் புலவரெல்லாம் வியந்து வாழ்த்த
வெற்றியுலா வருகின்றான் கம்பன் காணீர்
சித்தமெலாம் மகிழ்ந்துள்ளம் களி துளும்பத்
தெரிசித்துப் பயன்பெறுவோம் திரண்டு வாரீர்!

(நித்தியம் — நிலைபேறுள்ள; முரசு = வெற்றிமுரசு; நெடுந் தருமம் = சிறந்ததருமம்; பாரோர் = உலகத்தோர்; பத்திநெறி = பக்திநெறி; பதாகை = வெற்றிக்கொடி! உலா வருதல் = பவனி வருதல்; சித்தம் = மனம்; களி துளும்ப = மகிழ்ச்சிபொங்க)

108. வாழியசெந் தமிழ்மணக்கும் வளநாடு சிறக்க
வழிகண்ட கம்பனவன் புகழென்றும் வாழ்க!
வாழியவன் தந்தபெருங் காவியப் பூஞ்சோலை
வருநாளெல்லாம் வளர்ந்துவாழிய வாழியவே!
வாழியபன் மொழிமகளிர் பணிகேட்டு வணங்கும்
வாழ்வுயர்ந்த தமிழணங்கு
வாழிய வாழியவே!
வாழியவிப் 'புகழாரம்' தன்னையு மேற்றருளும்
வளர்புகழோன் கம்பனது திருநாமம் நன்றே

(சிறக்க = சிறப்புடைய; வருநாளெல்லாம் = வருகின்ற காலமெல்லாம்; பன்மொழி = பலமொழிகளாகிய; மகளிர் = பெண்கள்; தமிழணங்கு = தமிழ்த்தாய்.)

— முற்றும் —

